A
T
A

# ஆஸ்திரேலியத் தமிழ்க் கலாசாலை

# ஆதாரக்கல்வி

## தமிழ்ப் பாடநூல்

ஆஸ்திரேலிய விக்டோரிய அவசியக் கல்வித்திட்ட வரையறைக்குட்பட்டது.

AUSTRALIAN TAMIL ACADEMY

ஆஸ்திரேலிய தமிழ்க் கலாசாலை




அயலகத் தமிழர்களுக்கான
மரபுசார் தமிழ்க்கல்வி

AUSTRALIAN TAMIL ACADEMY

Culture Based Tamil Education © for Diaspora

Australian Victorian Essential Learning Standards (AusVELS)



எனை என்றுமுதாட்டிய அன்னை

விரல்பிடித்து வழிகாட்டிய தந்தை

நெறிபடுத்திய ஆசிரியர்

பாதங்களுக்கு சமர்ப்பணம்...

நாகை. கா. சுகுமாரன்

# தமிழ்ப் பாடநூல் – ஆதாரக்கல்வி

ஆண்டு 2014 - 2015




**ஆஸ்திரேலிய தமிழ்க் கலாசாலை**

கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக.

மரபுசார்த் தமிழ்க்கல்வி பாடநூல்

# நன்றிக்குரியவர்கள்

திரு. தமிழருவி மணியன், தலைவர், காந்திய மக்கள் இயக்கம்.

முனைவர் மு. பொன்னவைக்கோ, துணைவேந்தர், SRM பல்கலைக்கழகம்.

முனைவர் ப. அர. நக்கீரன், இயக்குனர், தமிழ் இணையக் கல்விக்கழகம்.

திரு. இல. சுந்தரம், துணைப்பேராசிரியர், SRM பல்கலைக்கழகம்.

தமிழுக்குத் தொண்டாற்றியத் தரணிவாழ்த் தமிழார்வலர்கள்.

புத்தக ஆக்கத்திற்கு ஊக்கமளித்தத் தோழர்கள், உறவினர்கள்.

அழகுற அச்சுப்பதித்த அச்சகத்தார்.

மரபுசார் தமிழ்க் கல்வி

பதிப்புரிமை : மைக்குறி வெளியீடு (Inkmark Publications, Australia)

முதற்பதிப்பு - 2014

நூலாக்கம் : நாகை. கா. சுகுமாரன்
தலைவர்
வள்ளுவர் அறக்கட்டளை
ஆஸ்திரேலியா

கணினி வடிவமைப்பு: நாகை. கா. சுகுமாரன்

ஆலோசனை : திருமதி ஜெகதீஸ்வரி காளிமுத்து, Dr. புவனேஸ்வரி சுகுமாரன், திருமதி கமலவல்லி சுகுமாரன், திருமதி கற்பகவல்லி சுரேஷ், திரு கார்த்திகேயன் சுகுமாரன்.

## தமிழ்த்தாய் வாழ்த்து




நீராரும் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகும்
சீராரும் வதனமெனத் திகழ்பரதக் கண்டமிதில்
தெக்கணமும் அதிற்சிறந்த திராவிடநல் திருநாடும்
தக்கசிறு பிறைநுதலும் தரித்தநறுந் திலகமுமே!
அத்திலக வாசனைபோல் அனைத்துலகும் இன்பமுற
எத்திசையும் புகழ்மணக்க இருந்தபெரும் தமிழணங்கே!
தமிழணங்கே!
உன் சீரிளமைத் திறம்வியந்து
செயல் மறந்து வாழ்த்துதுமே!
வாழ்த்துதுமே!
வாழ்த்துதுமே!



மனோன்மணீயம் பெ. சுந்தரனார்.

## இன்பத்தமிழ்

தமிழுக்கும் அமுதென்று பேர் ! அந்தத்
தமிழ் இன்பத் தமிழ்எங்கள் உயிருக்கு நேர் !
தமிழுக்கு நிலவென்றுபேர் ! இன்பத்
தமிழ் எங்கள் சமூகத்தின் விளைவுக்கு நீர் !
தமிழுக்கு மணமென்று பேர் ! இன்பத்
தமிழ் எங்கள் வாழ்வுக்கு நிருமித்த ஊர் !
தமிழுக்கு மதுவென்று பேர் ! இன்பத்
தமிழ் எங்கள் உரிமைச்செம் பயிருக்கு வேர் !

தமிழ் எங்கள் இளமைக்கு பால் ! இன்பத்
தமிழ் நல்ல புகழ்மிக்க புலவர்க்கு வேல் !
தமிழ் எங்கள் உயர்வுக்கு வான் ! இன்பத்
தமிழ் எங்கள் அசதிக்குச் சுடர்தந்த தேன் !
தமிழ் எங்கள் அறிவுக்குத் தோள் ! இன்பத்
தமிழ் எங்கள் கவிதைக்கு வயிரத்தின் வாள் !
தமிழ் எங்கள் பிறவிக்குத் தாய் ! இன்பத்
தமிழ் எங்கள் வலமிக்க உளமுற்ற தீ !



புரட்சிக்கவி பாரதிதாசன்

# நோக்கம்

அயலகத்தில் வசிக்கும் நம் குழந்தைகள் நம்முடன் சரளமாகத் தமிழில் பேசி, நம் பண்பாட்டையும், தாய் மொழியின் சிறப்பையும் உணர்ந்து மகிழவேண்டும் என்ற ஆசை எல்லாப் பெற்றோர்களுக்கும் இருக்கிறது.

அந்த நோக்கத்தை நிறைவேற்ற பல கல்வி நிறுவனங்கள் வார விடுமுறை நாட்களில் தமிழ் வகுப்புகளை நடத்தி வருகின்றன. இவ்வகுப்புகளுக்குச் சரியான பாடங்களைக் கொண்டப் புத்தகங்கள்தான் இன்றைய அவசியத்தேவை..

மேலும் அவை மிகக்குறுகிய காலத்தில் கற்பிக்க விழையும் ஆசிரியருக்குத்-துணையாக இருக்கவேண்டும். தாய்த்தமிழ் நாட்டைக் காணாமலே வாழும் மாணவர்கள்கூட தமிழ் மொழியின் சிறப்பையும் தமிழரின் பண்பாட்டு மேன்மையையும் நன்கு உணரக்கூடிய வகையிலும், இரசித்து மகிழக்கூடிய வகையிலும் பாடங்கள் இருக்கவேண்டும். தாய்மொழியைக் குழந்தைகள் ஆர்வத்துடன் கற்றுக்கொள்ளும் வகையில் பாடத்திட்டம் வடிவமைக்கப்படவேண்டும்.

வெறும் ஏட்டுக்கல்வி மட்டும் தராமல் பாடப்பொருளின் பின்னணியில் உள்ள உணர்வுப்பூர்வப் பண்பாட்டு நிகழ்வுகளையும் மாணவர்களுக்கு அறியத்தரும் போது அவர்கள் கற்கும் திறன் அதிகரிக்கிறது. இவையனைத்தையும் தன்னகத்தே கொண்டு மரபுசார்த் தமிழ்க் கல்வி என்ற ஒரு புதிய கல்வித்திட்டம் வடிவமைக்கப்பட்டது.

என் ஆசிரியர்ப் பணியில் மாணவர்கள், ஆசிரியர்கள், பெற்றோர்கள் என்ற முக்கோண வலைப்பின்னலில் கிடைத்த இந்த அனுபவங்களால் பிறந்தது தான் மரபுசார்த் தமிழ்க் கல்வித்திட்டம்.

இக்கல்வித்திட்டத்தில் உள்ள தமிழ்ப் பாடங்களும், கற்கும், கற்பிக்கும் முறைகளும் அயலகத்தில் வசிக்கும் மாணவர்களின் ஆர்வத்தைத் தூண்டும் வகையில் உள்ளன என்பது அனுபவ உண்மை. மேலும் இவை ஆசிரியரின் சுமைகளை எளிதாக்குகின்றன என்பதிலும் ஐயமில்லை.

இக்கல்வித்திட்டத்தின் மூலமாக அன்பு, உடல்நலம், தன்னொழுக்கம், சுற்றுப்புறச் சூழ்நிலையில் அக்கறை, மனிதநேயம், நாட்டுப்பற்று, குடும்பப்பற்று ஆகிய எல்லா வற்றையும் பற்றி தாய் மொழி வழியாக எளிதில் கற்றறியும் வகையில் பாடங்கள் வடிவமைக்கப்பட்டுள்ளன.

தமிழர்களின் கலை, இலக்கியப்பண்பாட்டுடன் இணைந்த தமிழ் கல்வியில், ஆஸ்திரேலிய அரசாங்கத்தின் கல்வித்திட்டமான AusVELS எனப்படும் ஆஸ்திரேலிய, விக்டோரிய அவசியக் கல்வித்திட்ட வரையறைக்கு உட்பட்டு பாடங்கள் தொகுக்கப்பட்டுள்ளன.

நன்றி

நாகை. கா. சுகுமாரன்
நிறுவனர்
வள்ளுவர் அறக்கட்டளை
web: www.valluvarfoundation.org
email: valluvarfoundation@gmail.com
+61 434 013 993

# தமிழ்ப் பாடநூல் – ஆதாரக்கல்வி

ஆண்டு 2014 - 2015

## மாணாக்கர் உறுதி மொழி

என் பெற்றோரைப் பெரிதும் போற்றி வாழ்ந்திடுவேன்.
என் தாய் மொழியை மறக்கமாட்டேன்.
என் ஆசிரியரை மதித்து நடப்பேன்.
கல்விதான் உலகில் சிறந்தது.
கல்விதான் என்னுடைய சக்தி.
நான் கற்ற செம்மொழித்தமிழை
மற்றவருக்குச் சொல்லிக் கொடுப்பேன்.
செம்மொழித்தமிழையும், தாய் நாட்டையும்,
இயற்கையையும் மதித்து நடப்பேன்.
குடும்பப்பற்று, நாட்டுப்பற்று, உண்மை, உழைப்பு,
உதவி, நேர்மை இவைகளைக் கடைபிடிப்பேன் என்று
நான் உறுதி கூறுகிறேன்.




என் பெயர்: ______________________

செல்லப் பெயர்: ______________________

வகுப்பு: ______________________

## பொருளடக்கம்

# வணக்கம் !

நாம் ஒருவரை ஒருவர் சந்திக்கும்போது வணக்கம் என்று கூறி, இரண்டு கரங்களையும் கூப்பி, சிரம் தாழ்த்தி வணங்க வேண்டும்.

விடைபெறும்போது நன்றி, வணக்கம் என்று கூற வேண்டும். இதுதான் நம் பண்பாடு. இதை நாம் மறக்கக்கூடாது.

## வாசித்துப் பழகுவோம்

வணக்கம் அம்மா
வணக்கம் அப்பா
வணக்கம் ஐயா
நன்றி அம்மா
நன்றி அப்பா
நன்றி ஐயா



## சொல்லையும் பொருளையும் அறிவோம்

அம்மா | அப்பா | வணக்கம் | பண்பாடு

கரம் : கை
சிரம் : தலை
கூப்பி : குவித்து

கரம் | சிரம் | ஐயா | நன்றி



# திருக்குறள்



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

## சொல்லையும் பொருளையும் அறிவோம்

எழுத்துக்கள் எல்லாம் அகரத்தை அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன. அதுபோல உலகம் கடவுளை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது.

அகரம் | எழுத்து | குடிசை | வீடு | மரம்

ஆலமரம் | மேடை | எழுத்தாணி | உலகு | ஓலை

திருவள்ளு- | திருக்குறள் | அடிப்படை

சூரியன் : ஆதவன்
ஆதிபகவன் : முதற்கடவுள்

# வண்ணங்கள்






ஊதா | கருநீலம் | நீலம் | பச்சை





மஞ்சள் | செம்மஞ்சள் | சிவப்பு





கருப்பு | வெள்ளை | அடர் மஞ்சள்

## சொல்லையும் பொருளையும் அறிவோம்

வண்ணம்: நிறம்

யாசித்தல் : பிச்சை எடுத்தல்

## ஆத்திசூடி

அறஞ் செய
விரும்பு

நீ தருமம் செய்ய
(கடமையைச் செய்ய)
ஆசைப்படு

# வடிவங்கள்

புள்ளி 

  புள்ளிகள்





கோடு

நேர் கோடு

கோடுகள்





வளைந்த கோடு

வளைந்த கோடுகள்

















வட்டம் | சதுரம் | முக்கோணம் | செவ்வகம்

# என் குடும்பம்

அம்மா

அப்பா

நான்

அண்ணன்

பாட்டி

தாத்தா

அக்கா

தம்பி

தங்கை

அத்தை

மாமா

குடும்பப்படம் வரைந்து வண்ணம் தீட்டு

## ஆத்திசூடி

ஆறுவது சினம்

கோபம்
தணிக்கப்பட
வேண்டியதாகும்

# என் பாடசாலை




வெண்பலகை






நாற்காலி

மேசை










புத்தகம்

கத்தரிக்கோல்



புத்தகப்பை



பேனா

அழிப்பான்

பென்சில்





ஆசிரியர்



தண்ணீர்

## ஆத்திசூடி



வண்ணம் தீட்டு
வாசித்துப்பழகு

**இயல்வது கரவேல்**

இயன்ற பொருளை யாசிப்பவர்களுக்கு மறைக்காமல் கொடு

# எங்கள் வீடு

வண்ணம் தீட்டு
வாசித்துப்பழகு

எங்கள் வீடு நல்ல வீடு
அம்மா அப்பா அண்ணனோடு
அக்கா தங்கை தம்பியெல்லாம்
அன்பாய் வசிக்கும் நல்ல வீடு
தென்னங் கீற்றுக் கூரைவீடு
தென்னந்தோப்பில் இருக்கும்வீடு
தாத்தா பாட்டி வாழும் வீடு
அத்தை மாமா வசிக்கும் வீடு
எங்கள் வீட்டைப் பாருங்கள்
விருந்து உண்ண வாருங்கள்

- நாகை சுகுமாரன்

குடிசை

கூரைவீடு

வாசல்

கதவு

சன்னல்

சுவர்

சூரியன்

மேகம்

தென்னை மரம்

தென்னந்தோப்பு

தென்னங்கீற்று

தேங்காய்



அ ஆ இ ஈ உ ஊ எ ஏ ஐ ஒ ஓ ஔ அ ஆ இ

# உயிர் எழுத்துக்கள்

தமிழில் உயிரெழுத்துக்கள் மொத்தம் பனிரெண்டு (12).

| | | | |
|---|---|---|---|
| அ | ஆ | இ | ஈ |
| உ | ஊ | எ | ஏ |
| ஐ | ஒ | ஓ | ஔ |



## ஆத்திசூடி

**ஈவது விலக்கேல்**

ஒருவர், மற்றவர்க்கு கொடுப்பதை வேண்டாமென்று தடுக்காதே.

அ ஆ இ ஈ உ ஊ எ ஏ ஐ ஒ ஓ ஔ அ ஆ இ

# உயிரெழுத்தும் சொல்லும் - 1




# அ



அணில்




# ஆ



இலை

# இ

# உயிரெழுத்தும் சொல்லும் - 2

ஈ



ஈ

உ



உரல்

ஊ



ஊதல்

# உயிரெழுத்தும் சொல்லும் - 3



எறும்பு

எ



ஏணி

ஏ

5

ஐந்து

ஐ

# உயிரெழுத்தும் சொல்லும் - 4

ஒ



ஒட்டகம்

ஓ



ஓடம்

ஔ



ஔவை

## ஆய்த எழுத்தும் சொல்லும்

ஃ



எஃகு

வண்ணம் தீட்டு
வாசித்துப்பழகு

# பாப்பா பாட்டு

ஓடி விளையாடு பாப்பா - நீ
ஓய்ந்திருக்க லாகாது பாப்பா
கூடி விளையாடு பாப்பா - ஒரு
குழந்தையை வையாதே பாப்பா.



காலை எழுந்தவுடன் படிப்பு - பின்பு
கனிவு கொடுக்கும் நல்ல பாட்டு
மாலை முழுதும் விளையாட்டு - என்று
வழக்கப் படுத்திக்கொள்ளு பாப்பா.



மகாகவி பாரதியார்

## ஆத்திசூடி

**உடையது விளம்பேல்**

உன்னிடத்திலுள்ள பொருளை அல்லது இரகசியங்களை பிறர் அறியுமாறு சொல்லாதே.

# பறவைகளின் ஒலி

வண்ணம் தீட்டு
வாசித்துப்பழகு

காகம் கரையும்
சேவல் கூவும்
கோழி கொக்கரிக்கும்
மயில் அகவும்
குயில் கூவும்
கிளி பேசும்
ஆந்தை அலறும்
வாத்து கத்தும்
குருவி கீச்சிடும்
புறா குனுகும்






























# விலங்குகளின் ஒலி

நரி ஊளையிடும்





நாய் குரைக்கும்

பூனை சீறும்





கழுதை கத்தும்

குதிரை கனைக்கும்





பசு கதறும்



சிங்கம் முழங்கும்





புலி உறுமும்

யானை பிளிரும்

# உயிர்மெய்யெழுத்தின் இனங்கள்

க ச ட த ப ற

வல்லினமாம்

ங ஞ ண ந ம ன

மெல்லினமாம்

ய ர ல வ ழ ள

இடையினமாம்

யாவரும் இங்கே ஓரினமாம்

ஆசிரியர் கவனத்திற்கு:
பேச்சுப்பயிற்சிக்கானப் பாடல்.

பதினெட்டு எழுத்துகளையும், இலக்கணத்தையும் ஒன்று சேர எளிமையாகக்கற்றுகொள்ள இந்தப் பாடல் உதவும். ஒவ்வொரு வகுப்பிலும் இந்தப்பாடலை ஒரு முறை பாடுவது மிக அவசியம்.

ஆண்டின் இறுதியில் ஒவ்வொரு எழுத்தையும் தெளிவாக உச்சரிக்கத் தெரிந்திருக்க வேண்டும்.

பயிற்சிக்கான சொற்கள்: தமிழ், தளிர், பழம், பலம், தளம், வலம், கரை, கறை, பனை, அணை போன்றவை.

# எண்கள்



0 சுழியம்



ஒரு கரடி



1 ஒன்று



2 இரண்டு





இரண்டு யானைகள்



மூன்று மயில்கள்



3 மூன்று

# எண்கள்





நான்கு 4 நான்கு தேனீக்கள்





ஐந்து வாத்துகள் 5 ஐந்து





ஆறு 6 ஆறு நத்தைகள்





ஏழு மாணவர்கள்

7 ஏழு





எட்டு பறவைகள்

8 எட்டு



ஒன்பது ஓணான்கள்
பச்சோந்திகள்

9 ஒன்பது





# 10 பத்து

பத்து மீன்கள்







1 2 3 4 5 6 7 8 9 10

## வாசித்துப் பழகுவோம்

## ஒருமையும், பன்மையும் அறிந்துகொள்வோம்!

| | |
|---|---|
| 1 ஒரு கரடி | 1 ஒரு கரடி |
| 1 ஒரு யானை | 2 இரண்டு யானைகள் |
| 1 ஒரு மயில் | 3 மூன்று மயில்கள் |
| 1 ஒரு தேனீ | 4 நான்கு தேனீக்கள் |
| 1 ஒரு வாத்து | 5 ஐந்து வாத்துகள் |
| 1 ஒரு நத்தை | 6 ஆறு நத்தைகள் |
| 1 ஒரு மாணவர் | 7 ஏழு மாணவர்கள் |
| 1 ஒரு பறவை | 8 எட்டு பறவைகள் |
| 1 ஒரு ஓணான் | 9 ஒன்பது ஓணான்கள் |
| 1 ஒரு பச்சோந்தி | 9 ஒன்பது பச்சோந்திகள் |
| 1 ஒரு மீன் | 10 பத்து மீன்கள் |

# எண்கள் பாட்டு



1. ஒன்று யாவருக்கும் தலை ஒன்று



2. இரண்டு முகத்தில் கண் இரண்டு



3. மூன்று முக்காலிக்கு கால் மூன்று



4. நான்கு நாற்காலிக்குக் கால் நான்கு



5. ஐந்து ஒரு கை விரல் ஐந்து



6. ஆறு ஈ க்கு கால் ஆறு

ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி.

7. ஏழு வாரத்தின் நாள் ஏழு



8. எட்டு சிலந்திக்குக் கால் எட்டு



9. ஒன்பது தானிய வகை ஒன்பது



10. பத்து இரு கை விரல் பத்து

# நல்லொழுக்கம்

| | |
|---|---|
| நான் | காலையில் எழுவேன் |
| நான் | பற்களைத் துலக்குவேன் |
| நான் | சுத்தமாக் குளிப்பேன் |
| நான் | தியானம் செய்வேன் |
| நான் | சிற்றுண்டி சாப்பிடுவேன் |
| நான் | பள்ளிக்குச் செல்வேன் |
| நான் | பாடங்களைப் படிப்பேன் |
| நான் | ஓடி விளையாடுவேன் |
| நான் | இரவில் தூங்குவேன் |

## சொல்லையும் பொருளையும் அறிவோம்

காலை · எழு · சுத்தம் · செய்

பகல் · பள்ளி · பாடங்கள் · பாடம்

இரவு · படி · சிற்றுண்டி · சாப்பிடு

பல் · பற்கள் · துலக்கு · தியானம்

விளையாடு · குளி · ஓடு · செல் · தூங்கு

**ஆசிரியர் கவனத்திற்கு:**
பேச்சுப் பயிற்சிக்கான வினாக்கள்




| | |
|---|---|
| எதைத் துலக்க வேண்டும்? | பற்களைத் துலக்க வேண்டும் |
| எப்படிக் குளிக்க வேண்டும்? | சுத்தமாகக் குளிக்க வேண்டும் |
| குளித்தபிறகு என்ன செய்ய வேண்டும்? | குளித்தபிறகு தியானம் செய்ய வேண்டும் |
| எதைப் படிக்க வேண்டும்? | பாடங்களைப் படிக்க வேண்டும் |
| எப்படி விளையாட வேண்டும்? | ஓடி விளையாட வேண்டும் |
| இரவில் என்ன செய்ய வேண்டும்? | இரவில் தூங்க வேண்டும் |

# அறுசுவைகள்



இனிப்பு

கரும்பு இனிக்கும்



கசப்பு

பாகற்காய் கசக்கும்



புளிப்பு

எலுமிச்சை புளிக்கும்



உவர்ப்பு

உப்பு உவர்க்கும்

காரம்

கார்ப்பு

மிளகாய் உறைக்கும்

இனிப்பு
கசப்பு
புளிப்பு
உவர்ப்பு
கார்ப்பு
துவர்ப்பு

துவர்ப்பு

பாக்கு துவர்க்கும்



# கங்காருவும் குவாலாவும்

வண்ணம் தீட்டு
வாசித்துப்பழகு

கங்காரு தாவிக்குதித்து ஓடும்.
கங்காரு காய்களையும்,
பழங்களையும் சாப்பிடும்.
குவாலா மரத்தில் தூங்கும்.
குவாலா இலைகளை சாப்பிடும்.



கங்காரு
குவாலா
இலை
கிளை
மரம்
புல்
தாவு
குதி
ஓடு
பழம்
சாப்பிடு
தூங்கு



# காய்கள்



தேங்காய்

வாழைக்காய்





மாங்காய்

பூசனிக்காய்





பீர்க்கங்காய்

வெண்டைக்காய்

பாகற்காய்



பரங்கிக்காய்





கத்தரிக்காய்

முருங்கைக்காய்





அவரைக்காய்

# பழங்கள்



மாம்பழம்



பலாப்பழம்



வாழைப்பழம்



கொய்யாப்பழம்



திராட்சைப்பழம்



அன்னாசிப்பழம்



சீத்தாப்பழம்



அத்திப்பழம்



நாவற்பழம்



மாதுளம்பழம்

பழங்களை
உண்போம்
ஆரோக்கியமாக
வாழ்வோம்



பப்பாளிப்பழம்

# மாம்பழம்



மாம்பழமாம் மாம்பழம்
மல்கோவா மாம்பழம்
சேலத்து மாம்பழம்
தித்திக்கும் மாம்பழம்
அழகான மாம்பழம்
அல்வா போல மாம்பழம்
தங்க நிற மாம்பழம்
உங்களுக்கும் வேண்டுமா?
இங்கே ஓடி வாருங்கள்
பங்கு போட்டுத் திங்கலாம்!

குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா

வண்ணம் தீட்டு
பேசிப் பழகு

# திசைகள்



## திசைகள் நான்கு

சூரியன் உதிக்கும் திசை கிழக்கு
சூரியன் மறையும் திசை மேற்கு
கிழக்கு திசையைப் பார்த்து நின்றால்
நம் இடது புறம் இருப்பது வடக்கு,
வலது புறம் இருப்பது தெற்கு.

கிழக்கு
மேற்கு
வடக்கு
தெற்கு

கிழக்கு

வடக்கு ⟷ தெற்கு

மேற்கு

## சொல்லையும் பொருளையும் அறிவோம்

| | | |
|---|---|---|
| தணி | : | குறை |
| சினம் | : | கோபம் |
| உதிக்கும் | : | தோன்றும் |

| | | |
|---|---|---|
| இடது | x | வலது |
| மேலே | x | கீழே |
| முன்னே | x | பின்னே |

## ஆத்திசூடி

**ஊக்கமது கைவிடேல்**

எப்போதும்
முயற்சியைக்
கைவிடாதே

# நாளும் கிழமைகளும்

ஞாயிற்றுக்கிழமை பிறந்த பிள்ளை
நன்றாய்ப் பாடம் படித்திடுமாம்
திங்கட்கிழமை பிறந்த பிள்ளை
தினமும் உண்மை பேசிடுமாம்
செவ்வாய்க்கிழமை பிறந்த பிள்ளை
செய்வதை ஒழுங்காய்ச் செய்திடுமாம்
புதன்கிழமை பிறந்த பிள்ளை
பெற்றோர் சொல்படி நடந்திடுமாம்
வியாழக்கிழமை பிறந்த பிள்ளை
மிகவும் பொறுமை காட்டிடுமாம்
வெள்ளிக்கிழமை பிறந்த பிள்ளை
வேண்டும் உதவிகள் செய்திடுமாம்
சனிக்கிழமை பிறந்த பிள்ளை
சாந்தமாக இருந்திடுமாம்
இந்தக் கிழமை ஏழுக்குள்
எந்தக் கிழமை நீ பிறந்தாய்?



குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா

## நாள்

| | | |
|---|---|---|
| நேற்று | இன்று | நாளை |
| காலை | பகல் | இரவு |

## ஆத்திசூடி

**எண்ணெழுத் திகழேல்**

எண்களையும், எழுத்துக்களையும் ஏளனம் செய்யாமல் கற்றுக்கொள்.



# நான் யார் தெரியுமா?



வண்ணம் தீட்டு
பேசிப் பழகு



என் பெயர் ______________________

நான் தமிழ்ப்பாடம் படிக்கிறேன்.

என் தமிழ்ப் பாடசாலையின் பெயர் ______________

நான் ______________ கிழமை பிறந்தேன்.

என் அம்மா பெயர் ______________________

என் அப்பா பெயர் ______________________

நான் ______________ என்ற இடத்தில் வசிக்கிறேன்.

எனக்குப் பிடித்த மிருகம் ______________

எனக்குப் பிடித்த பறவை ______________

எனக்குப் பிடித்த உணவு ______________



காலையில் பள்ளிக்குச் செல்வேன்

பகலில் பாடங்கள் படிப்பேன்

இரவில் தூங்குவேன்

நேற்று கடைக்குப் போனேன்

இன்று என் பிறந்த நாள்

நாளை ஊருக்குப் போவேன்

| | | |
|---|---|---|
| படி | ⟷ | படிப்பேன் |
| பேசு | ⟷ | பேசுவேன் |
| செய் | ⟷ | செய்வேன் |
| நட | ⟷ | நடப்பேன் |
| காட்டு | ⟷ | காட்டுவேன் |
| இரு | ⟷ | இருப்பேன் |

# மயில்

வண்ணம் தீட்டு
வாசித்துப்பழகு

மயில் ஒன்று ஆடுது
மந்தி எல்லாம் கூடுது!
குயில் ஒன்று பாடுது
குருவி எல்லாம் கூடுது!
மயிலைப் பார்த்து
குயிலைப் பார்த்து
மந்தி தலையை ஆட்டுது!

புலவர் இளஞ்செழியன்



குருவி

வாழைப்பழம்
மயில் தோகை
குயில் பாட்டு



குயில்



மயில்





மந்தி
குரங்கு



புல்

வண்ணம் தீட்டு
வாசித்துப்பழகு

# பச்சைக்கிளி

பால்
சோறு
கனி
பூசு
பற
மரம்
மஞ்சள்
அருந்து
உண்ணு
சாப்பிடு
விளையாடு
பச்சைக்கிளி

பச்சைக் கிளியே வா வா
பாலும் சோறும் உண்ண வா
கொச்சி மஞ்சள் பூச வா
கொஞ்சி விளை யாடவா
பையப் பையப் பறந்துவா
பாடிப் பாடிக் களித்து வா
கையில் வந்திருக்க வா
கனி யருந்த ஓடி வா



கவிமணி தேசிய விநாயகம் பிள்ளை

வண்ணம் தீட்டு
வாசித்துப்பழகு

# காற்றும் மழையும்

| | |
|---|---|
| மேகம் | மரம் |
| மின்னல் | வெள்ளம் |
| இடி | நாய் |
| மழை | பூனை |
| நீர் | எலி |
| காற்று | குடை |



இடி இடித்தது
காற்று வீசியது
மழை பெய்தது
வெள்ளம் வந்தது

# என் தோட்டம்

வண்ணம் தீட்டு
வாசித்துப்பழகு



செடி நட்டேன்
தண்ணீர் ஊற்றினேன்
பூ பூத்தது
அழகாய் இருந்தது

கன்றுக்குட்டி
மரம்
செடி
தண்ணீர்
மலர்
பூக்கள்
தோட்டம்
பாப்பா
பாதை

வண்ணம் தீட்டு
வாசித்துப்பழகு

# கைவீசம்மா

கை வீசம்மா கை வீசு!
கடைக்குப் போகலாம் கை வீசு!
மிட்டாய் வாங்கலாம் கை வீசு!
மெதுவாய்த் திங்கலாம் கை வீசு!



நேற்று நான் கடைக்குப் போனேன்.
அப்பா எனக்கு மிட்டாய் வாங்கித் தந்தார்.
மிட்டாயை மெதுவாகத் தின்றேன்.
மிட்டாய் இனிப்பாக இருந்தது.



நேற்று நீ எங்கு சென்றாய்? (போனாய்?)
யாருடன் நீ கடைக்குச் சென்றாய்?
உனக்கு மிட்டாய் வாங்கித் தந்தது யார்?
அப்பா எங்கே மிட்டாய் வாங்கினார்?
அப்பா என்ன வாங்கித்தந்தார்?
மிட்டாயை எப்படித் தின்றாய்?
மிட்டாய் எப்படி இருந்தது?

**ஆசிரியர் கவனத்திற்கு:**
பேச்சுப் பயிற்சிக்கான வாக்கியங்கள்.

மாணாக்கரைத் தெளிவாக உச்சரிக்கப் பயிற்சி கொடுக்கவும். அன்றாடம் பயன்படுத்தும் எளிய வாக்கியங்களை மீண்டும் மீண்டும் பேசிப் பழக்குவது அவசியம். இந்த வினாச்சொற்களைக் கொண்டு வேறு சில வாக்கியங்களைப் பேசப்பழக்கலாம்.

## ஆத்திசூடி

ஏற்ப திகழ்ச்சி

யாசித்து
வாழ்வது
இழிவானது.

## சாய்ந்தாடு

வண்ணம் தீட்டு
வாசித்துப்பழகு

சாய்ந்தாடம்மா சாய்ந்தாடு
சாயக் கிளியே சாய்ந்தாடு
குத்துவிளக்கே சாய்ந்தாடு
கோயில் புறாவே சாய்ந்தாடு
சோலைக் குயிலே சாய்ந்தாடு
தோகை மயிலே சாய்ந்தாடு
கண்ணே மணியே சாய்ந்தாடு
கற்பகத்தருவே சாய்ந்தாடு

கிளி புறா
குயில் மயில்
கண் மணி



குத்துவிளக்கு
கோயில்புறா
சோலைக்குயில்
தோகைமயில்
கற்பகதரு







### ஆத்திசூடி

**ஐய மிட்டுண்**

யாசிப்பவர்களுக்குக் கொடுத்து பிறகு உண்ண வேண்டும்.



வண்ணம் தீட்டு
வாசித்துப்பழகு

# தோ தோ நாய்க்குட்டி

தோ... தோ... நாய்க்குட்டி,
துள்ளி வாவா நாய்க்குட்டி.
உன்னைத் தானே நாய்க்குட்டி,
ஓடி வாவா நாய்க்குட்டி.
கோபம் ஏனோ நாய்க்குட்டி?
குதித்து வாவா நாய்க்குட்டி.
கழுத்தில் மணியைக் கட்டுவேன்
கறியும் சோறும் போடுவேன்.
இரவில் இங்கே தங்கிடு.
எங்கள் வீட்டைக் காத்திடு !

குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா



மணி

## பேசிப்பழகு:

நான் ஒரு நாயை வளர்த்தேன்.
தோ தோ என்று கூப்பிட்டேன்.
நாய்க்குட்டி துள்ளி ஓடி வந்தது.
நானும் ஓடியாடி விளையாடினேன்.
நாய்க்குட்டிக்குப் பசித்தது.
அது வாலை வாலை ஆட்டியது.
அது பாலை நக்கிக் குடித்தது.
என்னுடைய நாய் வீரமான நாய்.
அது ஒரு திருடனைப் பார்த்துக் குரைத்தது.



## ஆத்திசூடி

ஒப்புரவொழுகு

உலக நடையை
அறிந்து அதற்கேற்ப
நடந்துகொள்

# வானம்



வானம் நீல நிறத்தில் இருக்கும்.
வானத்தில் சூரியனும், சந்திரனும், நட்சத்திரமும், மேகமும் இருக்கும்.
பகலில் சூரியனைப் பார்க்கலாம்.
பகல் வெளிச்சமாக இருக்கும்.
இரவு இருட்டாக இருக்கும்.
இரவில் நிலாவைப் பார்க்கலாம்.
இரவில் நட்சத்திரங்கள் தோன்றும்.





| | | |
|---|---|---|
| வானம் | மேகம் | இருட்டு |
| பகல் | இரவு | வெளிச்சம் |
| சூரியன் | சந்திரன் | நட்சத்திரம் |
| கதிரவன் | நிலவு | |

வண்ணம் தீட்டு
வாசித்துப்பழகு

## ஆத்திசூடி

**ஓதுவதொழியேல்**

நல்ல நூல்களை
எப்பொழுதும்
படித்துக்கொண்டிரு.

வண்ணம் தீட்டு
வாசித்துப்பழகு

# அழகர் யானை



ஆனை ஆனை
அழகர் ஆனை
அழகரும் சொக்கரும்
ஏறும் ஆனை
கட்டிக் கரும்பை
முறிக்கும் ஆனை
காவேரி தண்ணீரை
கலக்கும் ஆனை
குட்டி ஆனைக்குக்
கொம்பு முளைச்சுதாம்
பட்டணமெல்லாம்
பறந்தோடிப் போச்சுதாம்!

ஆனை
யானை







## ஆத்திசூடி

ஔவியம் பேசேல்

எவரிடமும்
பொறாமை கொண்டு
பேசாதே.

# கிட்டு பட்டு

வண்ணம் தீட்டு
வாசித்துப்பழகு



வட்டமான தட்டு
தட்டு நிறைய லட்டு
லட்டு மொத்தம் எட்டு.

எட்டில் பாதி விட்டு,
எடுத்தான் மீதம் கிட்டு.
மீதம் உள்ள லட்டு

முழுதும் தங்கை பட்டு
போட்டாள் வாயில் பிட்டு.

கிட்டு நான்கு லட்டு,
பட்டு நான்கு லட்டு,
மொத்தம் தீர்ந்த தெட்டு
மீதம் காலித் தட்டு



**ஆசிரியர் கவனத்திற்கு:**
பேச்சுப் பயிற்சிக்கான வாக்கியங்கள்.

லட்டு இனிப்பாக இருக்கும்.
லட்டு உருண்டையாக இருக்கும்.

மாணாக்கரைத் தெளிவாக உச்சரிக்கப் பயிற்சி கொடுக்கவும்.
ஒரு மாணவர் கேள்வியைக் கேட்க அதற்கான பதிலை அடுத்தமாணவரைச் சொல்லவைக்கவேண்டும். கேள்விகள் உதாரணம்: தட்டில் எத்தனை லட்டுகள் இருந்தன? லட்டு எப்படி இருக்கும்?
கிட்டு எத்தனை சாப்பிட்டான்?
பட்டு எத்தனை சாப்பிட்டாள்?



## ஆத்திசூடி

அஃகம் சுருக்கேல்

அதிக இலாபத்துக்காக, தானியங்களை குறைத்து அளந்து விற்காதே.

# உயிர் எழுத்துக்கள் - எழுதிப்பழகு 1


















# உயிர் எழுத்துக்கள் - எழுதிப்பழகு 2



















எ


1
2


ஏ


1
2


ஐ


2
1
3
4

# உயிர் எழுத்துக்கள் - எழுதிப்பழகு 4



























படம்









படகு









மலை









மரம்









முயல்









பழம்









சட்டை









கரடி









தலை









சங்கு









நகம்









பறவை

# உயிர்மெய் எழுத்துக்கள் - எழுதிப்பழகு 5

ல






லட்டு

வ






வடை

ள








விளக்கு





பஞ்சு





சன்னல்








பணம்

# தமிழ் எழுத்துக்களின் அட்டவணை

| | | ஆய்த எழுத்து | உயிரெழுத்துக்கள் | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | ஃ | அ | ஆ | இ | ஈ | உ | ஊ | எ | ஏ | ஐ | ஒ | ஓ | ஔ |
| 1 | | க் | க | கா | கி | கீ | கு | கூ | கெ | கே | கை | கொ | கோ | கௌ |
| 2 | | ங் | ங | ஙா | ஙி | ஙீ | ஙு | ஙூ | ஙெ | ஙே | ஙை | ஙொ | ஙோ | ஙௌ |
| 3 | | ச் | ச | சா | சி | சீ | சு | சூ | செ | சே | சை | சொ | சோ | சௌ |
| 4 | மெய்யெழுத்துக்கள் | ஞ் | ஞ | ஞா | ஞி | ஞீ | ஞு | ஞூ | ஞெ | ஞே | ஞை | ஞொ | ஞோ | ஞௌ |
| 5 | | ட் | ட | டா | டி | டீ | டு | டூ | டெ | டே | டை | டொ | டோ | டௌ |
| 6 | | ண் | ண | ணா | ணி | ணீ | ணு | ணூ | ணெ | ணே | ணை | ணொ | ணோ | ணௌ |
| 7 | | த் | த | தா | தி | தீ | து | தூ | தெ | தே | தை | தொ | தோ | தௌ |
| 8 | | ந் | ந | நா | நி | நீ | நு | நூ | நெ | நே | நை | நொ | நோ | நௌ |
| 9 | | ப் | ப | பா | பி | பீ | பு | பூ | பெ | பே | பை | பொ | போ | பௌ |
| 10 | | ம் | ம | மா | மி | மீ | மு | மூ | மெ | மே | மை | மொ | மோ | மௌ |
| 11 | | ய் | ய | யா | யி | யீ | யு | யூ | யெ | யே | யை | யொ | யோ | யௌ |
| 12 | | ர் | ர | ரா | ரி | ரீ | ரு | ரூ | ரெ | ரே | ரை | ரொ | ரோ | ரௌ |
| 13 | | ல் | ல | லா | லி | லீ | லு | லூ | லெ | லே | லை | லொ | லோ | லௌ |
| 14 | | வ் | வ | வா | வி | வீ | வு | வூ | வெ | வே | வை | வொ | வோ | வௌ |
| 15 | | ழ் | ழ | ழா | ழி | ழீ | ழு | ழூ | ழெ | ழே | ழை | ழொ | ழோ | ழௌ |
| 16 | | ள் | ள | ளா | ளி | ளீ | ளு | ளூ | ளெ | ளே | ளை | ளொ | ளோ | ளௌ |
| 17 | | ற் | ற | றா | றி | றீ | று | றூ | றெ | றே | றை | றொ | றோ | றௌ |
| 18 | | ன் | ன | னா | னி | னீ | னு | னூ | னெ | னே | னை | னொ | னோ | னௌ |

# ஆத்திசூடி

அறஞ்செய விரும்பு — நீ தருமம் (கடமையை) செய்ய ஆசைப்படு

ஆறுவது சினம் — கோபம் தணிக்கப்பட வேண்டியதாகும்

இயல்வது கரவேல் — இயன்ற பொருளை யாசிப்பவர்களுக்கு மறைக்காமல் கொடு

ஈவது விலக்கேல் — ஒருவர், மற்றவர்க்கு கொடுப்பதை வேண்டாமென்று தடுக்காதே

உடையது விளம்பேல் — உன்னிடத்திலுள்ள இரகசியங்களை பிறர் அறியுமாறு சொல்லாதே.

ஊக்கமது கைவிடேல் — எப்போதும் முயற்சியைக் கைவிடாதே

எண்ணெழுத் திகழேல் — எண்களையும், எழுத்துக்களையும் ஏளனம் செய்யாமல் கற்றுக்கொள்

ஏற்ப திகழ்ச்சி — யாசித்து வாழ்வது இழிவானது

ஐய மிட்டுண் — யாசிப்பவர்கட்கு கொடுத்து பிறகு உண்ண வேண்டும்.

ஒப்புர வொழுகு — உலக நடையை அறிந்து அதற்கேற்ப நடந்துகொள்



ஓதுவ தொழியேல் — நல்ல நூல்களை எப்பொழுதும் படித்துக்கொண்டிரு.

ஔவியம் பேசேல் — எவரிடமும் பொறாமை கொண்டு பேசாதே

அஃகம் சுருக்கேல் — அதிக இலாபத்துக்காக, தானியங்களை குறைத்து அளந்து விற்காதே

ஔவையார்



ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு – நம்மில்
ஒற்றுமை நீங்கில் அனைவருக்கும் தாழ்வு
நன்றிது தேர்ந்திடல் வேண்டும் – இந்த
ஞானம் வந்தால் பின் நமக்கெது வேண்டும்?



விலைபோட்டு வாங்கவா முடியும்? – கல்வி
வேளைதோறும் கற்று வருவதால் படியும்!
மலைவாழை அல்லவோ கல்வி? – நீ
வாயார உண்ணுவாய் போ என் புதல்வி!